[12th September 1958

SRI N. K. PALANISAMI : பாக்டரி சட்டம் 61-வது செக்ஷன், 10-வது பிரிவின்படி ஷிப்டை மாற்றுவது என்றால் குறைந்தது ஒரு வாரம் நோட்டீஸ் கொடுக்கவேண்டும். தொழிற் தகராறு சட்டத்தின்படி 9-வது செக்ஷன் பிரகாரம் 21 நாட்கள் நோட்டீஸ் கொடுக்கவேண்டும். அப்படியிருந்தும் நோட்டீஸ் கொடுக்காமல் ஷிப்டை மாற்றி, ஒப்பந்தத்தின் பேரில் சம்பந்தப்பட்ட தொழிலாளி மன்னிப்பு கொடுக்கவேண்டும், லேபர் கமிஷனர் முன்பு ஆஜராகவேண்டும் என்று சொல்வதில் என்ன நியாயம் இருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : இது முடிந்து போன ஒரு தகராறு. அதை மீண்டும் கிளப்பி, இப்பொழுது இருக்கிற நல்ல ஸௌஜன்ய நிலைமையைக் கெடுக்க வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the management is not at all satisfied with the settlement reached ?

THE HON. SRI R. VENKATARAMAN : I think the question should be put to the management and not to the Minister.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் சொன்ன யோசனையை வரவேற்கிறேன். அதே யோசனையை நிர்வாகத்தினிடமும் சொல்லி, இந்த தொழிற் சச்சரவு சம்பந்தப்பட்டவரை விவகாரம் தீர்ந்துவிட்டதாகக் கருதி ஸௌஜன்ய நிலைமை ஏற்படுவதற்கு சர்க்கார் புத்திமதி சொல்லுவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்காரைப் பொறுத்தவரையில் இது ஒரு தீர்ந்துவிட்ட பிரச்னை என்றுதான் நினைக்கிறது. கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் தொழிற்சாலைக்குச் சென்று, அங்கு இருந்த எல்லா தொழிலாளர்களையும் நடந்ததை மறந்துவிட்டு நல்ல முறையில் வேலை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். இது முடிந்துவிட்ட விஷயமாகத்தான் நான் கருதுகிறேன்.

### *Land Revenue*

* 180 *Q*.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ராமநாதபுரம் ஜமீனில் இன்றுவரை தவணை கடந்து ஆயிரம் ரூபாய்க்கு மேல் கிஸ்தி (நிலவரி) பாக்கியுள்ளவர்கள் எத்தனை பேர்?

(ஆ) அவர்கள் தரவேண்டிய பாக்கித் தொகை எவ்வளவு?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Ten persons.

(*b*) Rs. 27,987–10–0.

SRI N. R. THIAGARAJAN : கோடைக்கானலில் சௌகரியமாகத் தங்குவதற்கு ஒரு விடுதி கட்டியாகவேண்டும். தங்குவதற்கு சௌகரியமான விடுதி இல்லாததால் அங்கு போகிறவர்களுக்கு கஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே, எவ்வளவு நாட்களுக்குள் விடுதி கட்டி முடிக்கப்படும் ?

MR. SPEAKER : இது 180-வது கேள்வியைப் பற்றியது. நீங்கள் கேட்ட கேள்வி வேறு. நிதி அமைச்சர் வந்தவுடன் அது எடுத்துக் கொள்ளப்படும்.

SRI K. RAMACHANDRAN : இந்த நில வரி பாக்கிகள் எத்தனை பசலிகளாக வசூலாகாமல் இருந்துகொண்டிருக்கின்றன ? அதை வசூலிப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதற்கு என்னிடம் தகவல் இல்லை. 1,000 ரூபாய்க்கு மேல் கிஸ்தி பாக்கியுள்ளவர்கள் எவ்வளவு பேர் என்றுதான் கேள்வி கேட்கப்பட்டது.

12th September 1958]

SRI N. R. THIAGARAJAN : பாக்கியுள்ளவர்களின் பெயர்கள் அடங்கிய ஜாபிதா கொடுக்க முடியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரி ஜாபிதா என்னிடத்தில் இல்லை.

*Dharangadhara Chemical Factory*

*181 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of Sri M. S. Selvarajan) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருச்செந்தூர் தாலுகாவில் ஆரம்பிக்கப்படும் தாரங்கதாரா கெமிகல் தொழிற்சாலைக்காக நில ஆர்ஜிதம் காரணமாய் வேலை இழக்கும் உப்புத் தொழிலாளர்கள் எத்தனை பேர்?

(ஆ) வேலை இழக்கும் உப்புத் தொழிலாளர்களுக்கு அக் கம்பெனியில் வேலைகளுக்கு முன்பாத்தியதை வழங்க ஏற்பாடு செய்ய ஏதேனும் உத்தேசமுண்டா?

THE HON SRI R. VENKATARAMAN : (அ) About 900 to 1,000 workers.

(ஆ) The company has assured the Collector of Tirunelveli that such of the affected salt workers who satisfy their requirements will be preferred to others for employment in the factory.

*182 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of Sri M. S. Selvarajan) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருச்செந்தூர் தாலுகாவில் ஆரம்பமாகும் தாரங்கதாரா ரசாயனத் தொழிற்சாலை உபயோகத்திற்கு ஆர்ஜிதம் செய்யப்படும் பட்டா நிலங்களுக்கு தகுந்த நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டவில்லை என்று அரசாங்கத்திற்குப் புகார் வந்திருக்கிறதா?

(ஆ) அதன் மீது எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Yes, Sir. Two petitions, one from Sri M. S. Selvarajan, M.L.A., and the other from Sri S. Vinayaga Nadar, were received. The requests contained in the petitions were duly considered by the Special Deputy Collector in charge of the acquisition of lands in Tirunelveli district for the Dharangadhara Chemical Works, Limited. No action was considered necessary on the request, as reasonable compensation was paid to the land-owners.

SRI K. ANBAZHAGAN : இந்த கெமிகல் பாக்டரி தொழிற்சாலையில் இலங்கையிலிருந்து திரும்பி வருகிறவர்கட்கு வேலையளிக்க முதலில் சலுகை கொடுப்பதற்கு வழி செய்யப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது உப்பு தொழிற்சாலையில் வேலை செய்து கொண்டிருக்கிறவர்கள் நிலத்தை இழக்கிறார்கள். அவர்களுக்கு முதல் சலுகை கொடுக்கவேண்டும். அதற்குப் பிறகு மற்றவர்களுக்குக் கொடுக்கப்படும்.

SRI M. KALYANASUNDARAM : நிலத்திற்கு நஷ்டாடு கொடுப்பது எந்த அடிப்படையில் மதிப்பிடப்படுகிறது? இந்த நிலத்தின் மூலம் அவர்கள் சம்பாதித்து வந்த ஊதியம் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுகிறதா? அல்லது அந்த வட்டாரத்தில் நிலத்திற்கு இருக்கக்கூடிய மதிப்பை மட்டும் எடுத்துக்கொள்கிறார்களா?